[Sri M. G. Ramachandran] [25th April 1962

மாட்டார்கள் என்று நம்புகிறேன். இந்தக் கலைச் செல்வத்தைச் சொல்லுகிற ஒரே வாய்ப்பு, ஒரே அமைப்பு நடிப்புக்கலைக்கு மட்டும் தான் இருக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன். எழுத்தாளர்கள் எழுதலாம். அதைப்படிக்கத் தெரிந்தவர்கள் மட்டும்தான் படிக்கலாம். எதையும் காணும்போது உள்ள நிலை நம்மை எங்கே அழைத்துச் செல்லவேண்டுமோ அங்கே அழைத்துச் சென்று காட்டமுடியும். தாழ்த்தப்பட்டவர்கள் உயர்த்தப்பட்டவர்கள் நிலை, தாழ்த்தப்பட்டவர்கள் துன்பப்படுவதைப்பற்றிப் பேசி, எழுதித் தெரிந்து கொள்ளுவதைவிட நேராகப் பார்த்தால் ஏற்படுகிற கருத்துக்கள் உயர்ந்தவை, உடனடியாக ஏற்படக்கூடியதாகவும் இருக்கிறது என்பதை அறிஞர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட கலைக்கு பாதுகாப்பு எங்கே? நாடக நடிகர்கள் தேவை என்றால் எப்படி உருவாக்குவது? அதற்கு என்ன திட்டம் என்றால், நம்மிடம் இல்லை. நான் வேண்டிக் கேட்டுக் கொள்வது—நடிப்புக்கலைக்கு முக்கியம் கொடுங்கள். நாடக மன்றம் புதிதாக வேண்டும். உருவாக்கித் தீரவேண்டும். ஒரே கலைஞன் நாட்டைத் தன் கையில் வைத்துக்கொண்டிருக்கும் நிலை எப்போதும் இருக்க முடியாது. மரணம் என்று இருக்கும் வரை நிரந்தரமானவன் என்பதும் இல்லை. முயற்சி முடிவடைந்து தீரும். முடிவு இல்லாதது இல்லை. அப்படியானால் அந்த இடத்திற்கு யாரைக் கொண்டுவருவது? தனிப்பட்ட மனிதர்கள் கொண்டு வர முயற்சிக்கலாம். அவர்களுக்குப் பாதுகாப்பு வேண்டும். கொட்டகை இல்லை என்பது ஒரு குறை. பணம் கேட்கவில்லை. நிதி தாருங்கள் என்று வற்புறுத்தக்கூடத் தயாராய் இல்லை. கொட்டகைகள் கட்டித் தாருங்கள். கொஞ்சம் மலிவான வாடகை வாங்கும் கொட்டகை வேண்டும். பஞ்சாயத்து போர்டு இருக்கிற இடங்களில், 5,000 பேருக்கு அதிகமாக இருக்கிற இடங்களிலே, நகராட்சி மன்றம் இருக்கிற இடங்களில் கட்டும்படி வற்புறுத்த வேண்டும். மற்ற இடங்களில் நீங்களே கட்டித் தாருங்கள். அல்லது நீங்கள் கொஞ்சம் நிதி கொடுத்து பாக்கியைச் சேர்த்துக்கொள்ளச் சொல்லுங்கள்.

அதோடு சினிமாவைப்பற்றி கவர்னர் உரையில் இல்லை என்று சொல்லும்போது நான் வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். 27 கோடி ரூபாய்க்கு மேல் மூலதனம் போட்டு நடக்கும் தொழில். அதில் நேரடியாகப்பணியாற்றுகிறவர்கள் ஏறத்தாழ லட்சம் பேர்கள். குறைபாடுகளைத் தயவுசெய்து மனதிலே கொண்டு பார்க்கவேண்டும். ஒருவேளை நான் சொல்லுகிற செய்தி நமக்கெல்லாம் கண்ணீர் வரும்படி இருந்தாலும் ஏற்றுக்கொள்ள வேண்டும். கரூரில் ஒரு சினிமாக் கொட்டகையில் டிக்கட் கலெக்டராக இருந்த நண்பர் இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இராமசாமி சாஸ்திரி தலைமையில் நடந்த கூட்டத்துக்கு அந்த மாநாட்டுக்கு வந்தபோது அந்தத் தோழர் சொன்ன கருத்தை அப்படியே சொல்ல ஆசைப்படுகிறேன். "எங்களுக்குக் கிடைப்பது 12 முதல் 15 ரூபாய். நாங்கள் நல்ல உடைகளை அணிந்துகொண்டு காத்திருக்கவேண்ம்டு. வருகிறவகர்ள் பெண்கள், பணக்காரர்கள், தாய்மார்கள், நல்ல வசதி உள்ளவர்கள் வருவார்கள். நல்ல உடை,

25th April 1962] [Sri M. G. Ramachandran]

சுத்தமாக இருக்கவேண்டும். சட்டை சலவைச்சட்டை வேண்டும். எண்ணெய் தடவித்தலை சீவிக்கொண்டிருக்க வேண்டும். தயவு செய்து அந்தக் கரூர் கொட்டகையில் வந்து பாருங்கள். இடைவேளை முடிந்து வெளிச்சம் அணைந்த உடன் இருட்டான உடன் கொட்டகைக்குப் பின்னுல் இருக்கிற மதில் சுவருக்குப்பின்னுல் ஏறிக் குதித்து எச்சில் இலையைத் தின்னுவதைப் பார்ப்பீர்கள்" என்று சொன்னுர். அதனுல் மன்ருடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த நிலை மாறவேண்டுமென்ருல் குறைந்த அளவு ஊதியம் என்ன என்பதை சர்க்காரே நிச்சயித்துத் தீர வேண்டும். அவர்களுக்குப் பாதுகாப்பு தரவேண்டும். அவர்களும் நம்மைச் சேர்ந்தவர்கள். இப்படிப்பட்ட தொழிலுக்குப் பாதுகாப்பு இல்லை என்ருல், அதைப் பற்றி மாநிலத்தலைவரின் அறிக்கையில் இல்லை என்ருல், நாங்கள் ஏமாற்றப்பட்டுவிட்டோம் என்று சொல்வதைத்தவிர வேறு வழியில்லை. எங்களை நாடியவர்களுக்கு நன்றிக்கடன் செலுத்த, இதையாவது சொல்லித் தீர வேண்டும். இதை நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லும்போது வற்புறுத்திச் சொல்லுகிறேன். ஒரு லட்சம் பேர்கள் பணியாற்றுகிறவர்கள் என்ருல் அவர்களைச் சுற்றி, 5, 10 அங்கத்தினர்கள் குடும்பத்தில் இருக்கிருர்கள். பத்து லட்சம் பேர்கள் வாழுகிருர்கள். அவர்களுடைய தாய்மார்களையும் தங்கைமார்களையும் சிந்தித்துப்பார்த்து பாதுகாப்பு அளிக்க வேண்டும். இங்கே ஒன்று சொல்ல விரும்புகிறேன். 4-00 p.m.

Industry Committee என்று நியமித்தார்கள் கல்வியமைச்சர் நிதியமைச்சர் திரு. சுப்ரமணியம் தலைமையில். அந்தக் குழு அக்கறையாகப் பாடுபட்டு ஏற்பாடு செய்தார்கள். நானும் அதிலே ஒரு அங்கத்தினர். அந்தக் கமிட்டி கடைசியாக விட்டிருக்கிற அறிக்கை எனக்கு திருப்தியாக இல்லாத காரணத்தால் அதற்குத் திருத்தம் அனுப்பி, அந்த அறிக்கையை வெளியிடவேண்டும் என்று விரும்பினுல் இதையும் சேர்த்து வெளியிட வேண்டும் என்று அனுப்பி வைத்திருக்கிறேன். ஆகையால் அந்தக் கமிட்டியினுடைய அறிக்கை உங்களுக்கு வருகிற நேரத்தில் இவைகளையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு நீங்கள் சிந்தித்துப்பார்க்கவேண்டும். அப்படி அதை சிந்தித்துப்பார்த்தால்தான் சினிமாத் தொழிலில் இருக்கும் அத்தனை கோடி பேர்கள் நிலைமை தெரியும். கோடிக் கணக்காக பணத்தை மூலதனமாக வைத்து நடைபெறுகிற தொழில் எந்த அளவுக்கு புறக்கணிக்கப்படுகிறது என்று தெரிந்து கொள்ள முடியும். உதகையில் கச்சா பிலிம் தொழில் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. அநேகமாக பிலிம் உற்பத்தியாகி வந்துவிடும் என்று சொல்கிருர்கள். டைரக்டர் திரு. கே. சுப்பிரமணியம் அவர்கள் பிரான்சு நாட்டுக்குப்போய் திரும்பி வந்தபோது, இந்தத் தொழில்பற்றி ஆராய்ச்சி செய்து சில கருத்துக்களைத் தெரிவித்திருக்கிருர்கள். கச்சா பிலிமில் எந்தத் தரத்தை நீங்கள் தயாரிக்கிறீர்களோ? அது எத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு ஊரில் பயன் படக்கூடிய நிலைக்கு வெளிவருமோ? அது எப்போது மக்கள் கையில் வருமோ? அதற்குள்ளாக அன்றைய தினம் வெளிநாடுகள் இந்தத் தயாரிப்பில் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கும் என்பதை மறந்துவிடக்கூடாது. இன்றைய தினம் இந்த பிலிம்

[Sri M. G. Ramachandran] [25th April 1962

மக்களுக்குப் பயன்படவில்லை என்று சொல்லும்போது, ஐந்து ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு அது வெளிவருமானால் வெளிநாடுகளின் வளர்ச்சிக்கு நாம் ஈடு செய்யமுடியுமா? அப்போது வெளிநாடுகளி லிருந்து அவற்றை இங்கு வருவித்துக்கொள்ளும் நிலைமைதானே இருக்கும் என்று கேட்டார் அவர். அதற்கு இன்னும் பதில் சொல்ல வில்லை. என்னைப்பொறுத்தவரையில் நான சொல்கிறேன், நான் காண்டுகளுக்குப் பிறகோ, இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகோ அந்த பிலிம்கள் வெளிவருமானால்கூட எந்த அளவுக்கு அது மக்கள் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளக்கூடிய நிலையில் இருக்கும் என்று சொல்லமுடியாது. இவைகளையெல்லாம் அமைச்சர்கள் சிந்தித்துப்பார்த்து அதற்கானவை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். திட்டங்கள் என்றால் நமக்காக மட்டுமல்ல. நம் சந்ததிகளுக்கும் பயன்படக்கூடியது. உடனடியாக நமக்குப் பயன்படவில்லையே என்று சொல்லக்கூடியது அல்ல. எங்கள் கட்சியைப் பொறுத்தவரையில், நாங்கள் அதை ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் எந்தத் திட்டமும் செய்கிறோம் என்று சொல்லும்போது, நமது சந்ததிகளுக்கு அதை விட்டுப்போகிறோம் என்னும்போது ஒன்றைச் சிந்திக்கவேண்டும். நாம் வகுக்கும் திட்டங்கள் நமக்குப் பயன்படக்கூடியதாக, நம் சந்ததிகளுக்குப் பயன்படக்கூடியதாக, இருக்கவேண்டுமென்பது என் ஆசை.

நடிப்புக் கலைப்பயிற்சியைப்பற்றிச் சொல்லும்போது, நாடகக் கொட்டகை பற்றிச் சொன்னேன். நடிகர்கள் மிகவும் தேவையாக இருக்கிறார்கள் என்று சொன்னார்கள். நடிப்புக் கலைப் பயிற்சி இந்த நாட்டில் இல்லை. சமீபத்தில் கனம் நிதியமைச்சர் அவர்கள் ஒரு நடிப்புக் கலைப் பயிற்சி நிலையத்தைத் திறந்து விளக்கேற்றி வைத்திருக்கிறார்கள். அந்த நிலையச் செயலாளரைக் கண்டு நிலையம் ஏற்படுத்தியிருக்கிறீர்களே, அதற்கான விதிமுறைகள் (Rules and Regulations) இருக்கிறதா என்று கேட்டேன். இனிமேல்தான் எழுதிக் கொடுக்கவேண்டுமென்று சொன்னார்கள். கனம் கல்வி அமைச்சர் அவர்கள் கலந்து கொள்கிற ஒரு நிகழ்ச்சி முக்கியமானதாக, ஆதார பூர்வமானதாகத்தான் இருக்கவேண்டும், இருக்குமென்று மக்கள் நம்புகிறார்கள். மந்திரிகள் கலந்துகொள் கிறார்கள் என்றால் அது நாட்டுக்குப் பயன்படக்கூடியதாக இருக்கு மென்றுதான் நம்புவார்கள். ஆனால் அண்மையில் திறந்துவைக்கப் பட்ட அந்நிலையம் இப்போதுதான் ஆரம்பிக்கப்பட்டது. அதற்கு யார் மூலதனம் போடுகிறார்கள் என்பது தெரியவில்லை; வெளிநாடு களிலிருந்து வந்திருக்கும் அம்பாசிடர்கள் உதவியளிப்பார்கள் என்று சொல்கிறார்கள். அது எனக்குப் புரியவில்லை. நான் விஷயம் தெரியாதவன். என்னைப் போன்றவர்களுக்குத் தேவை, விரும்பிக் கேட்டுக்கொள்வது இது போன்ற நிகழ்ச்சிகளில் அரசியலார் கலந்துகொள்ளும்போது, குறிப்பாக கல்வி அமைச்சரைப் போன்ற வர்களை யாராவது அழைத்தால்கூட, தயவுசெய்து கொஞ்சம் கண்டிப்பாக நடந்துகொள்ளவேண்டுமென்பதுதான். அது என்ன திட்டம்? அந்தத் திட்டத்தின் வளர்ச்சி எப்படி? அதை யார் நிறைவேற்றப்போகிறார்கள்? தேவையான மூலதனம் எவ்வளவு

இருக்கிறது? அதை எப்படிப் பயன்படுத்தப்போகிறார்கள்? லட்சக்கணக்கான ரூபாய் வந்தால், அதை யார் பொறுப்பேற்றுக் கொண்டு நடத்தப் போகிறார்கள்? என்பதை எல்லாம் கவனிக்க வேண்டும். 600 விண்ணப்பங்களுக்கு மேல் வந்திருப்பதாகச் சொல்கிறார்கள். இத்தனை பேருக்கு எப்படிச் சொல்லிக்கொடுப்பது? இதற்கு நிச்சயமாக விளம்பரம் செய்திருக்கக்கூடாது. பொதுக் குழு கூடவில்லை. விதிமுறைகள் ஏற்படுத்தப்படவில்லை. அப்படிப் பட்ட நிலையில் ஒரு ஸ்தாபனத்தை அமைச்சர் அவர்கள் துவக்கி வைத்திருக்கிறார்கள். என்னைப்போன்றவர்கள், பயிற்சி நிலையம் தேவை என்று சொல்கிறவர்கள் இவற்றை யாரிடம் போய்த் தெரிவித்துக்கொள்வது? நாங்களும் தென்னிந்திய நடிகர் சங்கத்தில் நடிப்புப் பயிற்சிப் பிரிவு ஒன்று அமைக்கத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறோம். திரு டி. கே. ஷண்முகம் அவர்களைக்கூட ஆசிரியராகப் பணியாற்றக் கேட்டுக்கொண்டிருக்கிறோம். அவர்களும் அதை ஏற்றுக்கொண்டார்கள். அதற்கு விதிமுறைகளும் ஏற்படுத்தியிருக்கிறோம். இருந்தாலும்கூட இன்னும் அமைச்சர்களை அழைத்து அதைத் திறந்துவைக்கச் சொல்லவில்லை. பயிற்சி நிலையம் என்றால் தேவையான ஆசிரியர்கள் எவ்வளவு? அவர்கள் தகுதி எப்படியிருக்கவேண்டும்? அவர்கட்கு ஊதியம் எவ்வளவு கொடுப்பது? இவைகளைப்பற்றியெல்லாம் தீர்மானிக்கவேண்டாமா?

ஒரு நடிகனின் உடல் காப்பாற்றப்படவேண்டுமென்றால் அவன் சில விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். நாங்கள் எல்லாம் ஏழு வயதில் நாடகமேடை ஏறியவர்கள். இதையெல்லாம் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு எங்களுக்கு இல்லை. ஒவ்வொரு நாளும் அலறுகிற நடிகன் ரத்தக் கொதிப்படைகிறான். அவனது உடலிலுள்ள ரத்த நாளங்கள் அதனால் சீர்கேடு அடைகின்றன. இதுபோன்ற நுணுக்க விஷயங்கள் அப்போது எங்களுக்குத் தெரியாது. எங்களுக்குத் தெரிய முடியாத மற்ற விஷயங்களைத் தெரிந்து செயல்படக்கூடிய நடிகர்களை உருவாக்கும் நிலைமை இந்த நாட்டில் வந்தால்தான் அது எதிர்கால சந்ததிகளுடைய கலைப் பயிற்சிக்குப் பலன் அளிக்கும். அதற்குப் பணியாற்றும்போதும் கலை சீர்கேடடையாமல் நல்ல கலை ஞானத்தைத் தோற்றுவிக்கக் கூடிய கலைஞர்கள் தோன்றுவார்கள். அப்படிப்பட்ட கலைஞர்களைத் தோற்றுவிக்க இதுபோன்ற நிலையங்கள் போதாது. பல்கலைக் கழகத்தில் சேர்ந்து நடிப்புக்கலையைப் பயில்வதற்கு வசதியாக அவற்றிற்குத் தனி வகுப்புக்கள் வேண்டும். கல்லூரி என்றிருந்தால் அங்கு உடலைப்பற்றி, விஞ்ஞானத்தைப்பற்றி, பொது அறிவைப்பற்றித் தெரிந்துகொள்ளலாம். இப்படி இவைகளையெல்லாம் தெரிந்துகொள்கிற வாய்ப்பை ஏற்படுத்தினால் அங்கிருந்து நல்ல மாணவர்களாக, நல்ல கலைஞர்களாக நாம் பெற முடியும். அதற்கென தனி வகுப்புக்கள் திறக்கப்படவேண்டும், சலுகைகள் கொடுக்கப்படவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதிகமாகப் பேச ஆசையிருக்கிறது. நேரமில்லை. தலைவர் அவர்கள் உட்கார் என்று சொல்வதற்கு முன்பு உட்காரவேண்டு

[Sri M. G. Ramachandran] [25th April 1962

மென்ற விருப்பம் எனக்கிருக்கிறது. என்னுடைய வேண்டுகோள்களை இந்த அளவுக்கு எடுத்துக்கூற வாய்ப்பளித்த தலைவர் அவர்களுக்கும் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த அங்கத்தினர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

MR. CHAIRMAN : A beautiful maiden speech.

* DR. T. V. SIVANANDAM : Mr. Chairman, Sir, before I deal with the Address of the Governor, I would like to remind you about the last portion of the speech of our ex-Finance Minister Sri Subramaniam in this House on the occasion of offering felicitations to him. He had requested you to give opportunity to youngsters, youngsters in age as well as youngsters in the Legislature, to speak boldly and express frankly their points of view. He has also requested the Press and I would like to make the same request through you to the Press to give proper opportunity for the people in the country to know what the youngsters in the Legislature are doing.

An Hon. Member : This is the House of Elders.

DR. T. V. SIVANANDAM : Even then there are youngsters in the Legislature, youngsters in experience. The speeches of such Members should be given proper publicity in the Press so that the people at large may know quite well what they are doing.

Sir, I am now reappearing before you as the elected Member from the Madras West Central Graduates' Constituency. I see here several new faces as you, Sir, also do. It will be possible for you to introduce every Member to other Members. Excuse me, Sir, when I say that at least hereafter you may please introduce all the new Members to the Council so that it may be possible for Members to know each other very well.

MR. CHAIRMAN : The hon. Member was not here on the first day when the new Members were sworn-in.

THE HON. SRI R. VENKATARAMAN : It is his fault.

4-10 p.m. DR. T. V. SIVANANDAM : Even others can be introduced, not only Members who were sworn in afresh.

Secondly, I must thank the Governor and indirectly our Chief Minister for the recommendation he has made, for nominating the ex-Chief Justice of our State as a Member of this Council. It is really an honour that they have done to the retired Chief Justice who was also an acting Governor of our State for some time. Fortunately he thought fit to come here as a nominated Member. Really it adds to the dignity and decorum of our House. We are also very happy to see here Sri K. R. Ramaswamy who got the President's medal as the best actor in the Tamil drama. We are proud to have him. I am expressing this without any feeling of party differences.

25th April 1962] [Dr. T. V. Sivanandam]

The general elections have gone on very smoothly. I do agree with the hon. Member Sri A. R. Thangavel Mudaliar when he said that it was due not only to their party but to other parties also. If the general elections have gone on very smoothly in our State, it is due to the co-operation that has been given not only on behalf of the Government by their Presiding Officers and Polling Officers but also by the general public and the political parties who participated in the elections. Hence, in the Address of the Governor it has been rightly said that the elections have gone on very smoothly.

Sir, when I first became a Member of this Council in the year 1956, I made a remark in my maiden speech that the first thing that a person should learn after becoming a legislator was to give a wrong statement of election expenses. I want to repeat the same thing now also because everybody knows quite well that persons have spent lakhs and lakhs of rupees but still they are expected to give accounts of election expenses restricted to Rs. 9,000. Hence, I request the Government and also the Minister in charge of Elections to take up the matter at a higher level and see that hereafter at least candidates are not asked to give accounts of their election expenses or that the permissible limit of election expenses is raised considerably.

THE HON. SRI R. VENKATARAMAN : What is the suggestion of the hon. Member?

DR. T. V. SIVANANDAM : Rupees 1 lakh (Laughter). I say so because the expenses are going very high and let us be nearer the truth . In the 1952 general elections election expenses were very small when compared with what we are spending now. Now, every election means spending of several thousands and lakhs of rupees and I request the Government to see what best they can do to prevent the people from giving a wrong statement of accounts.

Panchayat Raj has come to stay. But what do we actually feel? Panchayats are doing very good work. There is also an evil that has come along with the Act. What I mean is that several political parties have come up and several factions have arisen in the villages. Nobody can deny this. There were days when the whole village seemed to be one entity for doing any sort of work in the village. But because of this Act we have seen several factions arising. It is because political parties are entangling themselves in the panchayat elections. Hence, my personal view is that political parties should not enter into the elections to panchayats and municipalities.

In the Governor's Address it has been said that we have to find the resources for implementing the Third Five-Year Plan satisfactorily. As the hon. Member Sri Balasubramanya Ayyar said, we have to read between the lines. Their statement denotes that there would be imposition of more taxes in future. I am very sorry to hear it. There is a limit to the imposition of tax,

[Dr. T. V. Sivanandam] [25th April 1962

Already the Centre has announced several taxes—direct taxes as well as indirect taxes. If some more taxes are imposed, it will be the last straw to break the camel's back. We must know that the economy of the country depends mostly upon the middle class people who are having several industries and business. If the Government go on increasing the taxes and putting more burden on the middle class people, I am sorry that a stage will come when we will have to mortgage our property only to somebody else to meet out the taxes. Even the enthusiasm of the people to further the industries and business will wane if the Government go on imposing taxes. Hence, I request the Hon. the Finance Minister when he prepares the next budget not to propose any new taxes, because it will be a big burden on the common man.

The Governor has also stated that it is of no use simply investing money in trade but there must be administrative competency also. I do agree with that. Very often we find that the efficiency of the administration is going down. It is on account of quick promotion being given to employees. When giving promotions, we must be careful to see that an efficiency bar is there and that good training is given to the employees to shoulder the responsibility of administration.

The other day when the Employees State Insurance Hospital was opened at Aiyanavaram, our popular Chief Minister said that it was his wish that every village should have a hospital. I do welcome the idea. But is it practically possible to have a hospital in every village? It may even be possible to have a hospital in every village, but is it possible to get qualified persons to man the hospitals? We have seen several primary health centres are without doctors and medicines. Only yesterday the hon. Member Sri Balasubramanya Ayyar said that when he went round canvassing for his election from the Graduates Constituency, he saw several hospitals without medicines for use during emergencies. I have to take that statement only with a pinch of salt. They may be having medicines for use during emergencies, but they may not be having medicines for use during normal times. Emergencies will be met within the hospitals. I am very sorry that we are not having still enough medical men to man the several hospitals. I am very glad to hear from the hon. Member Sri M. G. Ramachandran that he is running a hospital. People like him who have got enough wealth at their command should come forward to run hospitals. I hope the Government will also subsidise in some way or other if necessary. It will not be possible simply by increasing the number of medical colleges to get more medical men to go to the hospitals and render service. The Government must find out the reasons for derth of doctors. They must find out the reason why when there are several medical men, they do not come fotward to do Government service. If it is said that it is on account of poor emoluments, I do agree. Doctors are paid very low. We may say that doctors must be more sympathetic and that doctors must take to the work in a missionary spirit. I do agree, At the same time, they have to meet their needs,

25th April 1962] [Dr. T. V. Sivanandam]

Hence they must be paid well. They must be given all facilities to see that their work in the hospital goes on perfectly all right. Multiplication of medical colleges is not going to solve the problem. We could produce only students with M.B.B.S. degree of a sub-standard. I think even the Leader of the Opposition will agree with me when I say that for want of proper teachers to man the hospitals and the medical colleges, it will not be possible to produce medical men with M.B.B.S. qualification and with perfect efficiency and knowledge. Hence, if the Government really want more doctors to take up service under them, they must give more emoluments to them, and give them more facilities, if they are to stick on to the service and carry on their work. Now, we see several people join the service but suddenly resign and leave the service. Government must find out why they resign from the service. Some of the reasons that we find are, they are very frequently transferred from place to place and unhappily in many cases husbands and wives are separated because of their different duties. In some cases it is due to favouritism and influence that they manage to remain in the same place. If these things are remedied, I think some of the doctors at least will remain in the services. 4-20 p.m.

The other thing I was often referring to on the floor of the House and also in Medical Conferences is with regard to District Headquarters Hospitals and Taluk Headquarters Hospitals. It would be better to have a skeleton staff of paid doctors in those hospitals and leave the other departments to remain in charge of the honorary staff. The honorary system has come to stay and we know perfectly well that very good work has been turned out by these honorary doctors. More facilities should be given to such doctors and the number of such doctors must be increased in all the hospitals. Only a minimum number of paid staff should be retained in such hospitals. If this is done, the services of the other doctors could be utilised for the Primary Health Centres and thus it will be easy for us to see that enough doctors are available to man the other hospitals. Otherwise, it would not be easy for us to find the men required to man those hospitals.

It has been pointed out that there are difficulties in the honorary system. I am an honorary surgeon and I have been doing service as such for the past 25 years or so. I say we are here to do service even at the cost of our private practice. Honorary men are very well off and if the Government find anything wrong with these honorary men, they are at perfect liberty to take any action like the one that they are now taking against service persons. The maximum action that they could take against the service men is to transfer them from one place to another place. In the case of honorary men, the Government could even dispense with their services and take in anybody else in their place. If the honorary system is properly worked without any sort of prejudice or step-motherly feelings, I am perfectly certain that our hospitals will be the first in the whole of India in the matter of perfect management and efficiency.

[Dr. T. V. Sivanandam] [25th April 1962

Then, Sir, the Employees State Insurance Scheme has come to stay. Rightly or wrongly, the Government have taken up the scheme. The service system has been introduced in several places except Coimbatore. If a committee were appointed to evaluate the work done under the scheme, I dare say, they will come to the conclusion that the panel system has worked very well rather than the service system. There may be some flaws in the panel system as there are some in the service system also. But it is for the Government to find remedies for them. Because of these few faults it does not mean that they should give up the panel system once for all.

Another burning question of the day is about the students who joined the G.C.I.M. Course. That course has been abolished. We do not know what is to happen to the Fourth year and the final year students and whether they would be allowed to sit for the examinations. These students want M.B.B.S. degree to be given to them. Government have to decide what action they should take in regard to that. G.C.I.M. students now get a diploma for integrated system of medicine and not for the allopathic system of medicine. The Indian Medical Council cannot recognize this diploma unless it is a diploma for allopathic system of modern medicine. If the Government really want that the Indian Medical Council should recognize this diploma, the best thing they should do is this. These students have already wasted two years in their appeal, in spite of repeated deputations to the Government. First of all, the Government must give them a diploma, just like the D.M.S. based on the results of examinations. It is the Government that should give the diploma and not the University. After getting this diploma in modern medicine only, they should be permitted to approach the Medical Council for recognition. Until this is done, the Medical Council would not look into their claims. I am sorry the Hon. the Minister for Health is not here just now. I understand that only three days ago another memorandum was given to her in this regard. I am sure the Hon. the Leader of the House will take note of these points and bring them to the notice of the Hon. Minister for Health and the Government. In the first instance, the Government should award them a diploma in modern medicine. Then certainly the Indian Medical Council will recognize it. If these people want straightway to be given degrees on a par with the M.B.B.S. students, it is for the University to decide the question—whether these G.C.I.Ms. with diploma in modern medicine should be given fresh training like the L.M.Ps. and others before they grant the M.B.B.S. degree. After the award of the D.M.S. only or its equivalent to these students, the University must be approached as to how best they could be considered for the grant of the M.B.B.S. degree.

In this connection, we must also remember how these students came to join the G.C.I.M. course. It is not because their basic qualifications are less than those who enter the M.B.B.S. course,

25th April 1962] [Dr. T. V. Sivanandam]

The qualifications for them are more or less the same. Because of the fact that they could not secure admission to the regular M.B.B.S. course, they went to the College of Integrated Medicine. Many have come out of the college with the G.C.I.M. diploma. What I hear from the authorities of that college is that 80 per cent of the hours of study of these students are spent on modern medicine and only about 20 per cent on other systems. I do not think there is any other way for the Government to solve this problem except to constitute a Board for the grant of D.M.S. diploma to these students and then approach the Medical Council and the University to have a special course for these people, for the grant of M.B.B.S. degrees. There are already many G.C.I.Ms. in the service of the Government. Several of them have not been regularised. This non-regularisation is not a new thing in the Government departments. Not only in the Medical Department but in several other departments of the Government the services of people have not been regularised for years together. Even after a period of ten years, their services have not been regularised. Therefore, I would urge on the Government to take speedy steps to see that the services of these men are regularised by the Indian Medical Council. The University might be asked to give G.C.I.M. students a short course, if necessary. Even now we see several of these persons are practising only the allopathic system and not the indigenous system of medicine.

Then, Sir, as regards opening of new medical colleges, these institutions should not be a sort of factory to produce the M.B.B.S. degree holders. Before deciding to open a medical college, the Government should find out whether they have properly qualified medical men to take up teaching on the clinical and non-clinical sides. Unless the teachers are well qualified, we cannot expect the students to have a good knowledge of the fundamentals of medicine and surgery. Even if they have to be paid heavily, Government should get hold of only highly qualified men to be in charge of teaching as that will pay them good dividends later on. I hear that there is a proposal to start a medical college somewhere in the State. I do not know where. Several rumours are there. Some say it will be at Salem, others say it will be at Tirunelveli and some others say it will be at Coimbatore. I would press the claim of Coimbatore for the establishment of the Medical College because we have got all the facilities there. We have a big hospital with a bed-strength of 850. We have also a good number of phylanthropically minded men who would come forward to donate money for the buildings and others. If the college is located at Coimbatore, the amount of money that the Government would have to spend on it will be far less than if the college is established at Tirunelveli, Salem or any other place. When I was on my election tour in Salem, people there told me that they had got a railway cess of about Rs. 23 lakhs. Their claim is that this should be utilised for the setting up of the college there. I have no objection to that being done because my constituency is Salem, Coimbatore and Nilgiris. But what I now

learn is that this cess should go to the Panchayat Unions only and not for any other purpose. That being the case, I do not think
4-30 p.m. that the amount of Rs. 23 lakhs, which Salem is going to offer, will be accepted. Seeing this, it will be possible, and it is good also to have the medical college at Coimbatore, where we can get all the facilities. Even the money that is going to be spent by the Government will be less. Before any medical college is established in any place, let the Government see whether they have got the proper men to take the clinical and non-clinical subjects. Otherwise, the sub-standard doctors that we are going to produce will not be utilising their clinical acumen to diagnose the disease. They will diagnose the disease without the clinical acumen . Hence, I request the Government to see that they favourably consider the claims of Coimbatore when they establish a medical college.

Mr. CHAIRMAN : The hon. Member's time is up.

Dr. T. V. SIVANANDAM : One more minute, Sir. I want to speak about the University Act. The University Act was passed some decades back. It requires amendment as it is outmoded. I may boldly say it here in the presence of you and the Leader of the Opposition. I hope you will agree with me that at the time when the University Act was passed, there were less of ex-officio members and more of elected members. But now it so happens that more of ex-officio members and less of elected members are there. There are several other things about which I am not going to speak in detail. Because, Sir, you have already stated that I must stop. But I must say that the University Act has got to be amended. Similarly the Madras Medical Council Act has also got to be amended. We must have several Universities in our State. It has already been talked of in the Senate also that we must have at least two or three Universities or at least functional universities. The Madras University, which is going on with the past glory, has become very big and unwidely. If we really want it to survive, if we really want efficient people to come up, several other universities—at least functional universities—must be established in different places. The compulsory primary education, the educational fee concession, the midday meal scheme, and the old age pension, are all welcome. But before we launch upon them, we must see where the finances are to come from. If the finances are not properly tackled for these schemes, I do not think the schemes will work well. Anyhow I am very glad to participate in this discussion on the Governor's Address, which is a very simple, matter-of-fact and non-controversial address

Thank you, Sir.

* SRIMATHI T. L. THIRUPURASUNDARI AMMAL : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, அடியாளை மாட்சிமைதங்கிய கவர்னர் அவர்கள் இந்தச் சபைக்கு புதிய அங்கத்தினராக தேர்ந்தெடுத்ததற்கும், இன்னும் தமிழகத்தின் தியாகச் சின்ன

மாக விளங்கும் முதல் அமைச்சர் அவர்களுக்கும் மற்ற அமைச்சர் களுக்கும் முதற்கண் என்னுடைய வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறேன். என்னுடைய சிறிய சிற்றுரையைச் சீக்கிரமாக முடித்துக்கொள்கிறேன். கவர்னர் அவர்கள் பிரசங்கத்தில் 9 டன் உணவு உற்பத்தி அதிகரித்ததாகச் சொல்லியிருக்கிறார்கள். இன்னும் கொஞ்சம் அதிகமாக உற்பத்தி செய்தால், இப்போது ரூ 1—6—0 ரூ 1—5—0 ஆக இருக்கும் அரிசியை ஒரு படி ஒரு ரூபாய்க்குப் போடலாம். அதற்கு மேல் நாம் ஒன்றும் செய்வதற்கு முடியாது, ஆனால் எதிர் கட்சி அங்கத்தினர்கள் ஒரு ரூபாய்க்கு 3 படி அரிசி கொடுப்போம் என்று தேர்தலின்போது சொல்லி மக்களுடைய மனத்தை மாற்ற முயன்றார்கள். அந்த 3 படி அரிசி என்பதை 3 பிடி அரிசி என்றுதான் நினைத்துக் கொள்ள வேண்டும். உற்பத்தி அதிகமானால் ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி போடலாம். இதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். பொதுவாக விலைவாசிகள் கொஞ்சம் அதிகமாகத்தான் இருக் கின்றன. இருந்தபோதிலும் எவ்வளவுக்கெவ்வளவு குறைக்க முடியுமோ அதை அரசாங்கம் கட்டாயம் செய்யும் என்று நான் நினைக்கிறேன்.

இன்னொன்று, வயதானவர்களுக்கு எல்லாம் பென்ஷன் கொடுப்பது என்று ஒரு திட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள் அதற்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். கட்டாயம் அது செய்ய வேண்டியதுதான். ஆனால் 65 வயது ஆகிறது என்று எப்படி தீர்ப்புச் சொல்லுவது என்பதற்கு அரசாங்கம் ஒரு திட்டம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அது மட்டுமல்ல; மனைவி இருந்தால் அவர்களுக்குக் கொடுப்பதில்லை என்று இருக்கிறது. அப்படி இருக்கக்கூடாது. ஏனெனில் 65 வயது ஆன ஒரு கிழவருக்கு மனைவி 62, 63 வயதானவர்கள் இருக்கலாம். இல்லாவிட்டால் சிறு வயதாகக்கூட இருக்கலாம். ஆனால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியாமல் இருந்தால் அவர்கள் எப்படி கணவனைக் காப்பாற்ற முடியும் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். **(hear, hear)** அதையும் நாம் கவனித்து மனைவி இருந்தாலும்கூட 65 வயதானவர்களுக்கு அவசியம் அந்தப் பென்ஷனைக் கொடுக்க வேண்டும் என்று அடியாள் கேட்டுக் கொள்கிறேன்.

இன்னொன்று, எங்கள் சிந்தாதரிப்பேட்டை பக்கமாக கூவம் ஆறு ஓடுகிறது. அது துர்நாற்றம் அடிக்கிறது. அதை நல்ல ஆறாக மாற்றி, அதன் பக்கங்களில் எல்லாம் பிளாட்பாரம் அமைத்து, பூங்கா வைத்து நல்ல முறையில் செய்தோமேயானால் இந்தச் சென்னைப் பட்டணம் மிகவும் நன்றாக இருக்கும். அது மட்டுமல்ல. அது அப்படி இருப்பதனால் ஓரங்களிலே எல்லாம் குடிசைகள் போட்டிருக்கிறார்கள். நான்கூட கலெக்டர் அவர் களுக்கு எழுதி அதை எடுக்கவேண்டும் என்று சொல்லியிருந்தேன். ஏழைகள் வசிக்கிறதற்கு வசதி இல்லை ஆகையினால் அங்கே எல்லாம் குடிசைகள் போட்டிருக்கிறார்கள். கண் ஆஸ்பத்திரி பக்கத்திலே கூட சிறிய குடிசைகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஹார்பர்

[Srimathi T. L. Thirupurasundari Ammal] [25th April 1962

பகுதிலேயும் அப்படித்தான். அவர்களுக்கு எல்லாம் இட வசதி வேறு எங்கேயாவது செய்து கொடுத்து ஏற்பாடு செய்ய வேண்டு மென்று கேட்டுக் கொண்டு எனக்கு இந்த சந்தர்ப்பத்தை அளித்த தலைவர் அவர்களுக்கு என் நன்றியையும் வணக்கத்தையும் செலுத்தி முடித்துக் கொள்ளுகிறேன்.

MR. CHAIRMAN : Sri S. Jayarama Reddiar will now speak.

SRI S. JAYARAMA REDDIAR : Sir . . .

MR. CHAIRMAN : The hon. Member will please speak from his allotted seat. That is our practice.

SRI S. JAYARAMA REDDIAR : அக்ராசனாதிபதி அவர்களே, இந்த சபைக்கு மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்ட நிலையிலே, 1946-ம்
4-40 p.m. வருஷத்திலே இந்த சபையின் மெம்பராக இருந்த மிகவும் மதிப் பிற்குறிய டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் அவர்களையும் தங்களையும் மீண்டும் இங்கு பார்க்க சந்தர்ப்பம் கிடைத்ததற்கு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அப்போது சாதாரண மெம்பராக இருந்த தாங்கள் இன்று இந்தச் சபைக்கு அக்ராசனாதி பதியாக இருந்து எங்களுடைய நடவடிக்கைகளைக் கண் காணிக்கும்படியான உயர்ந்த ஒரு சந்தர்பத்தை ஆண்டவன் உங்களுக்கு அளித்திருப்பதைக் கண்டும் அதை வெகு நல்ல முறையில் தாங்கள் நடத்தி வருவதைப் பார்த்தும் நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன்.

அடுத்தபடியாக, இந்த சபையானது சாதாரணமாக கட்சி முறையில் தேர்தலுக்கு நின்று ஏற்படுத்துகிற சபை அல்ல என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். கடந்த தேர்தலில் என்னைப்போன்றவர்கள் காங்கிரஸ்காரர்கள் என்ற நாமம் சூட்டப்பட்டு, தேர்தலில் ஆதரவு தேடின போதிலும்கூட, காங்கிரஸ்காரர்கள் என்ற நிலையிலே போடப்படாமல் இருந்ததால் எதிர்க்கட்சிக்காரர்கள் கூட எங்களுக்கு வாய்ப்புக் கொடுத்து இந்த தேர்தலில் வெற்றிப் பெறச் செய்ததற்கு சந்தர்ப்பம் இருந்தது என்பதை நான் இங்கு சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அந்த முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட நாம் எல்லோரும் இந்த மன்றத்தில் மிகவும் நிதானமாகவும் நல்ல முறையிலும் காரியங்களைச் சிந்தித்து பார்த்து நடந்து கொள்ள வேண்டிய பொறுப்பில் இருக்கிறோம். அப்படி நடக்க வேண்டு மென்ற எண்ணத்தில் தான் இந்த மேல் சபை என்ற சபையை உண்டாக்கியிருக்கிறார்கள் அதனுடைய கர்த்தாக்கள் என்று உங்களுக்கு சொல்ல ஆசைப்படுகிறேன். அந்த முறையில் இந்த மன்றத்தில் நிதான புத்தி உடையவர்கள் அதிகமாக இருக்க வேண்டும். நாட்டிலே கீழ் சபையில் இருக்கக்கூடியவர்கள் உணர்ச்சி வசப்பட்டு காரியங்களைச் செய்துவிட்டாலும், அவற்றை நிதானமாக ஆலோசித்துப்பார்த்து நடவடிக்கைகளை நல்ல முறையில் செய்யவேண்டுமென்றுதான் இந்த சபை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தக் கர்த்தாக்கள் அதைத்தான் எதிர்பார்த்தார்கள். இந்த சபையில் நடந்த விவாதங்களில் பல

25th April 1962] [Sri S. Jayarama Reddiar]

நண்பர்கள் பல விஷயங்களைப்பற்றிப் பேசினார்கள். அவரவர்கள் எந்த சார்பிலே தங்கள் வாழ்க்கையை நடத்துகிறார்களோ, அந்த சார்பாக அதைப்பற்றி அழுத்தம் திருத்தமாகப் பேசினார்கள். பல வருஷமாக நான் அரசியல் வாழ்க்கையில் இருந்த காரணத்தாலோ அல்லது பொதுவான நோக்கத்துடன்தானோ, அரசாங்கத்தை நடத்துகிறவர்கள் எப்படி நடத்துகிறார்கள் என்பதைக் கண்டு கவர்னர் பிரசங்கத்தையும் மற்ற பிரசங்கங்களையும் நோக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். நண்பர் தங்கவேலு முதலியார் அவர்கள் சொல்லிய விஷயங்களில் ஒரு சில விஷயத்தைச் சொல்ல ஆசைப்படுகிறேன். எலக்ஷனைப்பற்றிப் பேசினார்கள். முன்னைய தேர்தலில் நமது முதல் மந்திரி அவர்களுடன் நான் போட்டி போட்டேன். எவ்வளவோ கடுமையான போட்டி இருந்தாலும்கூட அந்தப் போட்டியிலே எந்த விதமான ஆச்சரியமான விஷயமும் இல்லாதபடி ஒரு எடுத்துக்காட்டாக அந்த எலக்ஷனை அவர் நடத்தினார் என்பதை நான் சொல்ல ஆசைப்படுகிறேன். இருவருக்கும் எந்த விதமான கசப்பு மனப்பான்மையும் ஏற்படாத அளவுக்கு அவர் நடந்துகொண்டதால் தான் இப்போது இந்தத் தேர்தலிலே அவரோடு சேர்ந்து அவருக்கு ஒத்துழைக்க ஒரு வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். நான் அதை நேரில் கண்டு பார்த்ததால்தான் சொல்கிறேன்.

SRI A. K. THANGAVEL MUDALIAR: நான் காஞ்சிபுரத்தில் நடந்ததைத்தான் சொன்னேன். உங்கள் ஊரில் நடந்ததைச் சொன்னது போல் எங்கள் ஊரில் நடந்ததைச் சொன்னேன். நேரில் பார்த்ததால் சொன்னேன்.

SRI S. JAYARAMA REDDIAR: அதேபோல்தான் என் அனுபவத்தை நான் சொல்கிறேன். பொதுவாக எலக்ஷனில் நான் பார்த்த அளவில், கேள்விப்பட்ட அளவில், கெடுதலான முறையில் நடக்கவில்லை. ஒரு முன்மாதிரியாகத்தான் நடந்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். கவர்னர் அவர்கள் இந்த எலக்ஷனைப்பற்றி நல்லமுறையில் சொல்லியிருப்பதில் தவறில்லை என்றே நான் நினைக்கிறேன்.

அடுத்தபடியாக சதாரணமாக இந்தத் திட்டத்தைப் பற்றியும் ஏழைமக்களுடைய முன்னேற்றத்தைப் பற்றியும் எல்லோரும் பேசினார்கள். உபாத்தியாயர்களாக இருந்தாலும் சரி, அல்லது சினிமாவில் ஈடுபட்டிருக்கிறவர்களானாலும் சரி எந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் அவர்கள் மனிதர்கள்தான். ஏழையாக இருப்பவர்களும் மனிதர்கள்தான். அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயரவேண்டுமென்பதுதான் எல்லோருடைய ஆசையாக இருக்கிறது. அந்த முயற்சியில்தான் கடந்த பல வருஷங்களாக அரசாங்கம் முயற்சி செய்து வருகிறார்கள். அந்த முயற்சியில் இன்னும் தீவிரமாக ஈடுபட்டு அதில் பல விஷயங்களில் அங்கம் வகிக்கிற காங்கிரஸ்காரர்களிடத்தில் குற்றம் குறைகள் இருக்கலாம். குறை இல்லாதவர்கள் இல்லை. ஆனால் கடமை உணர்ச்சியுடன் இந்த மந்திரி சபை நல்ல மனிதருடைய தலைமையில் ஈடுபட்டு காரியங்களைச் செய்து வந்திருக்கிறது இந்த சென்னை

[Sri S. Jayarama Reddiar] [25th April 1962

மகாணம் என்பதை நான் அறிவேன். மற்ற மாநிலங்களைப் பார்த்தால் நம்முடைய மாகாண அதிகாரிகளும் சரி, அல்லது அவர்களை நிர்வகிக்கும் மந்திரிகளாக இருந்தாலும் சரி எந்த வகையில் பார்த்தாலும் எனக்கு ஒரு பெருமிதமான உணர்ச்சிதான் தோன்றுகிறது. பல மாகாணங்களுக்கும் போய் பார்த்திருக்கிறேன். மத்திய சர்க்கார் நடக்கிற இடங்களுக்கும் சென்றிருக்கிறேன். அந்த அனுபவத்தில் பார்க்கும்போது நம்முடைய மாகாணத்தில் இருக்கிற நிர்வாகத்திறம், காரியங்களின் போக்கு எல்லாம் பார்த்தால் இது ஒரு முன்மாதிரியாக இருப்பதை மகிழ்ச்சிக்குரிய விஷயமாகத்தான் சொல்லவேண்டும். இதைப் பற்றி யாரிடத்திலும் பெருமையோடு கூறிக்கொள்ளலாம். அதிகாரிகள் அதிகமாக இருக்கிறார்கள் என்று இப்போது இங்கு பிரஸ்தாபிக்கப்பட்டது. கிராமங்களில் உள்ளவர்கள் (லே மென்) விவரம் தெரியாதவர்களும் இதைத்தான் சொல்கிறார்கள். என்ன, எங்கு பார்த்தாலும் இந்த ஜீப்பை எடுத்துக்கொண்டு அதிகாரிகள் திரிகிறார்களே, எதற்கு இத்தனை தாசில்தார்கள், அதிகாரிகளைப் போட்டு இப்படி குட்டிச்சுவர் ஆக்குகிறார்கள் என்று சாதாரண மனிதர்கள் சொல்கிறார்கள். சில சமயங்களில் அதிகாரிகளுக்காக அதிகமாக பணம் செலவழிக்கிறார்களே என்றும் சொல்கிறார்கள். நம் மாகாணத்தை விட்டு வெளியே சென்று பார்க்க வேண்டும். உதாரணத்திற்காக சொல்கிறேன். திருப்பதிக்குப் போய் பாருங்கள். அப்போதுதான் நமது அருமை தெரியும். முன்பு எல்லாம் விருதுநகரிலிருந்து காரில் புறப்பட்டு வந்தால் திருச்சி வரும்போது ஒரு சட்டை மாற்ற வேண்டும். அதற்குள் அழுக்காகிவிடும். இங்கு வந்ததும் ஒரு சட்டை மாற்றவேண்டும். அதற்குள் அதுவும் அழுக்காகி விடும். ஆனால் இப்போது விருதுநகரிலிருந்து காரில் வந்தால் மறு நாளும் அந்த சட்டை வெள்ளையாகவே போட்டுக் கொள்ளும்படி இருக்கிறது. இது சாதாரணமான முன்னேற்றம் என்று சொல்ல முடியாது. நான் நடிகர் ராமச்சந்திரன் அவர்களை இங்குதான் நன்றாகப் பார்க்கிறேன். நான் அதிகமாக சினிமா பார்ப்பதில்லை. அவர் சற்று கனமாக இருப்பார் என்று நினைத்தேன். ஆனால் நல்ல அழகிய தோற்றம் உள்ளவராக இருக்கிறார். அவருக்கும் இந்த அனுபவம் இருக்கலாம். இருபது வருஷங்களுக்கு முன்னால் ராமநாதபுரத்தில் 1940-ல் ஜில்லா போர்டு தலைவனாக நான் இருக்கிற காலத்தில் எந்த இடத்தில் ரோடு போட வேண்டுமென்றும், பள்ளிக்கூடம் கட்டவேண்டுமென்றும் நினைத்தோமோ அங்கெல்லாம் இப்போது அவை நடந்துவிட்டன. முதுகுளத்தூர் போன்ற பிற்பட்ட இடங்களில் வனாந்திரம் என்று சொல்லப்பட்ட இடங்களில் எல்லாம் இப்போது இரவு நேரங்களில் சென்னை மவுண்ட் ரோட்டில் போகிற மாதிரி ரோடு வசதிகளும் விளக்கு வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறார்கள்.

ஏழைகள் இல்லாமலில்லை. ஏழைகள் எங்கும்தான் இருக்கிறார்கள். சுதந்திரம் வந்த பிறகு நாம் ஏற்றுக் கொண்ட பொறுப்பை சரிவர செய்கிற காரணத்தினால் நான் ஜில்லா போர்டு தலைவனாக இருந்த நேரத்தில் கனவிலும் நினைக்காத காரியங்களை எல்லாம் இப்போது செய்து வருகிறோம். திட்டங்கள்

25th April 1962] [Sri S. Jayarama Reddiar]

போடுவதன் விளைவாகத்தான் இவையெல்லாம் வருகின்றன என்பதற்கு உதாரணமாக இதைச் சொன்னேன். நானும் 5 வருஷம் இல்லாமல் 20 வருஷமாக தொடர்ந்து இங்கு இருந்துக் கொண்டிருக்கிறேன். அந்தக் காலங்களில் விருதுநகரிலிருந்து புறப்பட்டு சாத்தூர் போகும்போது மழை பெய்து தண்ணீர் வந்துவிட்டால் சாத்தூருக்குப் பக்கத்தில் உள்ள ஒரு பாலத்தில் போக முடியாது. அங்கேயே இரண்டு நாட்கள் இருக்கவேண்டும். அல்லது கிழக்கே வெகு தூரம் போய் சுற்றிக் கொண்டு வர வேண்டும். அந்த பாலத்தைக் கட்டுவதற்கு ஒவ்வொரு வருஷம் பட்ஜெட்டில் 4 லட்சம், 5 லட்சம் என்று பணம் ஒதுக்கப்படும். பிறகு செலவாகாது. இந்தப் பாலம் இப்போது மிக சவுகரியமாக ஆகிவிட்டது. அதை நான்தான் செய்தேன் நீதான் செய்தாய் என்று பலர் சொல்லிக்கொள்கிறார்கள். அது யாருடைய முயற்சியும் இல்லாமல் தானாகவே சீர் செய்யப்பட்டு விட்டது. அதை திறந்து வைக்கும்போது முதல் மந்திரி அவர்கள் சொன்னார்கள், யாரும் இதற்கு முயற்சி செய்யவில்லை, தானாகவே அது வந்துவிட்டது என்று. அந்தப் பகுதியில் உள்ள பி.டபிள்யூ. டி. இஞ்சினியர்கள் அதைப் பார்த்து அவர்கள் வகுக்கிற திட்டங் களிலே அதைச் சேர்த்தார்கள். அதனால் அது தானாகவே நிறை வேறிவிட்டது. ஆகவே நாட்டில் செய்ய வேண்டிய காரியங்களை எல்லாம் பத்து பனிரெண்டு வருஷகாலமாக செய்து வந்திருக் கிறார்கள். அதில் குறைபாடுகள் இருக்கலாம். ராமநாதபுரம் ஜில்லாவில் கிழக்குப் பகுதிகளில் மழையில்லை. அங்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. கலெக்டர் கூட ஜனங்கள் இந்த வருஷத்தில் ஒன்றும் சாகுபடி செய்யாமல் இருக்கிறார்கள் என்று எழுதியிருக்கிறார். அதனால் கிஸ்தி வஜா செய்யவேண்டுமென்று பலர் சொல்கிறார்கள். இதுபற்றி ரெவின்யூ செக்ரட்டரியிடம் பேசும்போது கிஸ்தி வஜா செய்து என்ன செய்வது? அதனால் ஒன்றும் வந்துவிடாது. அதனால் ரொம்ப நஷ்டத்தைப் போக்கி விட முடியாது என்றார். ஆகையால் இன்னும் எட்டு மாத காலத்திற்கு அந்த பிரதேசத்தில் மீண்டும் மக்கள் வாழ்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கலெக்டரிடம் சொல்லியிருக்கிறது. முதல் மந்திரியிடமும் சொன்னோம்.

பிற்பட்ட பிரதேசங்களிலே இயற்கையின் காரணமாகப் பல கஷ்டங்கள் வருகின்றன. அதற்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது. 5 அடிக்கு கீழே தண்ணீர் எடுத்தால் உப்பாக இருக்கும். அருப்புக் கோட்டைக்கு கிழக்கே கடல் வரையில் உப்பாக இருக்கும். திரு. கரியமாணிக்கம் என்ற சுதந்திரக் கட்சி எம்.எல்.ஏ. தண்ணீர் இல்லையே, தேவகோட்டையில் குளித்து விட்டுப் போகிறேன் என்று சொல்லுகிறார். Tube well போரிங் போட்டாலும் உப்பு தண்ணீராக இருக்கும். வேறு வழியில்லை. மலையிலிருந்து தண்ணீர் கொண்டு வர முடியாது. அவர்களுக்கு யார்தான் வழி செய்யப் போகிறார்கள் என்று தெரியவில்லை. அந்த மாதிரி இடங்களில் என்ன செய்வது என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். அங்கே இருக்கிற ஏழைகளுக்கு குடிசைத் தொழில் மாதிரி ஏதாவது செய்து கொடுக்க வேண்டும். இனிமேல் Industry கொடுத்தால் பிற்பட்ட இடங்களுக்கு கொடுக்கவேண்டும்.

4-50 p.m.

[Sri S. Jayarama Reddiar] [25th April 1962

வேறு இடங்களுக்குக் கொடுக்க கூடாது. தொழில் அமைச்சர் அவர்கள் எங்கள் ஜில்லாவில்கூட பிற்பட்ட தாலுகாக்களுக்குத் தான் நூற்பு ஆலைகள் கொடுத்து வருகிறார்கள். அதை வளம் பெற செய்ய பிரயாசை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதில் நாம் எல்லோரும் ஒத்துழைத்து இந்த மாகாணம் மேலும் மேலும் வளர்ச்சி அடைய எல்லோரும் பாடுபட வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, கொடுத்த இந்த சந்தர்ப்பத்திற்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

Mr. CHAIRMAN : I now fix ten minutes for each speaker. Sri K. Ramadoss will now speak.

Sri K. RAMADASS : மதிப்புக்குரிய தலைவர் அவர்களே, இந்த கவர்னர் உரையை வரவேற்கின்ற முறையிலே அனுபவம் வாய்ந்த சபையில் நானும் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். எனக்கு முன்னால் பேசிய பல கனம் அங்கத்தினர்கள் பல கருத்துக்களை எடுத்துக் கூறி இருக்கிறார்கள். புதிய மந்திரி சபையில் இளைஞர்களுக்கும் இடம் கொடுக்கப்பட்டு தமிழ் நாட்டு அரசாங்கம் எப்படி எல்லாத்துறைகளிலேயும் மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறதோ அதேபோல் மந்திரி சபை அமைப்பதிலும் வழிகாட்டியாக இருக்கிறது என்று இந்த சமயத்தில் சொல்லிக்கொள்ளுகிறேன். அதே போல் முதியோர்கள் வாழ்க்கைக்காக கொடுக்கப்படுகிற உதவித் தொகைத்திட்டம். ஏற்கெனவே குழந்தைகளுக்கு எல்லாம் இலவசக் கல்வி கொடுத்ததின் மூலம் குழந்தைகளின் அன்பையும் பெற்றோர்களின் ஆதரவையும் பெற்ற நம்முடைய மந்திரி சபை முதியோர்களுக்குப் பென்ஷன் திட்டத்தை வகுத்துக் கொடுத்ததின் மூலம் அவர்களுடைய வாழ்த்தையும் பெற்றிருக்கிறது என்று சொல்லிக்கொள்ளுகிறேன். அப்படி நல்ல மந்திரிசபை அமைந்ததோடுமட்டுமில்லாமல் நல்ல காரியங்களையும் உறுதியாகச் செய்யும் முறையில் இருக்கிறது. அப்படி இருக்கும்போது இந்த கவர்னர் உரையில் கட்டாய ஆரம்பக்கல்வி என்று சொல்லப்பட்டு இருக்கிறது. இந்தக் கட்டாய ஆரம்பக்கல்வி வரவேற்பதோடு கூட, இலவசக்கல்வி என்ற பெயரால் 100 ரூபாய்க்கு உட்பட்ட வருமானம் உள்ளவர்களின் குழந்தைகளைப் படிக்க வைக்கலாம் என்று இருப்பதை நம் மந்திரிசபை நன்றாக யோசித்துப் பார்த்து வரவு செலவு திட்டங்களை சமர்ப்பிக்கிற நேரத்தில் குறைந்த பட்சம் 200 ரூபாய்க்கு உயர்த்த வேண்டும் என்று உங்கள் மூலமாகத் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதே போல் குடிதண்ணீர் பிரச்சனையை சென்னையில் எடுத்துக் கொண்டால் எந்தக் காரணத்தாலோ சென்னை நகர சபையில் பொறுப்பு வகிக்கிறவர்கள் அக்கறை காட்டுவதாகத் தெரியவில்லை. North Madras Trunk Main என்று சொல்லப்படுகிறதிட்டத்தை 1950-ம் ஆண்டில் ஆரம்பித்ததை இப்போது 1962 முடிந்த பிறகும் கூட ஒன்றும் நிறைவேற்றப்படாமல் இருப்பதைக் காணுகிறோம். வட சென்னையில் இருக்கிற ஏழைகள் தண்ணீருக்காக எந்தவிதம் கஷ்டப்படுகிறார்கள்

என்பதைப் பார்க்கும் போதுகூட அது குறித்து நகர சபை நிர்வாகத்தினர் அக்கரை எடுத்துக் கொள்ளவில்லை. அதே போல் **Railway Level-Crossing-ஐ** எடுத்துக் கொண்டால், சர்க்கார் நகர சபையை ஏஜன்டாக வைத்து பணம் கொடுத்தும்கூட அதைச் சரியாகப் பயன் படுத்தாமல் திருப்பி அனுப்புவதை எனக்குத் தெரிந்த வரையில் தெரிந்து கொண்டு இருக்கிறேன். தண்ணீர் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் லெவல் கிராசிங்கில் மேம்பாலம் கட்டுவதும். அது இல்லாததால் இடைஞ்சல் அதிக மாக இருக்கிறது என்று சபையில் எல்லோருக்கும் சொல்லாம லேயே தெரியும். குறிப்பாக திருவொற்றியூர் ஹைரோடில் உள்ள லெவல் கிராசிங், நண்பர் திரு. எம். ஜி. ராமச்சந்திரன் அடிக்கடி செல்லக்கூடிய கோடம்பாக்கம் லெவல் கிராசிங் இவைகளை எடுத்துக் கொண்டால், நடந்து போகிறவர்கள் கூட ஒரு மணி நேரம் வரை காத்துக் கொண்டு இருக்க வேண்டி இருக்கிறது. அரசாங்கம் கொடுத்த பணத்தை நகரசபை சரியாகப் பயன்படுத்த வில்லை என்பது தான் என் பணிவான எண்ணம். அப்படிச் சொல்லுகிறபோது சர்க்கார் கொடுக்கிற கடனையும் நன்கொடையை யும் பயன்படுத்தாமலே, வேலையைத் தள்ளிப் போடுகிற நிலைமையைக் காணுகிறேன். ஆகவே நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால் இந்தக் குடிதண்ணீர், லெவல் கிராசிங்க்கு மேம் பாலம் கட்டுகிற பிரச்சனைகளை நகரசபைக்கு கொடுக்காமல் சர்காரே நடத்தினால் நகரமக்களுக்கு வசதியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

மற்றொன்று, குடிசைகள் அமைக்கிற பிரச்சனையில் நகர சுகாதாரம் எந்த அளவுக்கு பாதிக்கிறது என்று இந்த நேரத்தில் சொல்லித்தான் தீர வேண்டி இருக்கிறது. அரசியல் கட்சிக்காரர் கள் என்று சொல்லக் கூடியவர்கள் எல்லாம் தேர்தல் நேரத்தில் எங்கே பார்த்தாலும் குடிசை போட்டுக்கொள்ள குடிசைவாழ் மக்களையும் ஏழைகளையும் தூண்டிவிடுகிற காட்சியைப் பார்க் கிறோம். சமீபத்தில் நடந்த பொதுத் தேர்தல் நேரத்தில்கூட ஓட்டு வாங்குவதற்காக, பெரும்பாலும் காற்றோட்டத்துக்காகவும், பள்ளிகள் கட்டவும், விளையாட்டு மைதானம் ஆக்குவதற்காகவும், வைக்கப்பட்டிருந்த மனைகளில் எல்லாம் ஏழைகளை குடிசை போட்டுக் கொள்ளுங்கள் என்று அரசியல் கட்சி சம்பந்தப்பட்ட வர்கள் அதிலும் பொறுப்பிலே இருக்கிற மேயர் அந்தஸ்திலே இருக்கிறவர்களும் அதைப் போன்ற அந்தஸ்திலே இருக்கிற மற்றவர்களும் உற்சாகப்படுத்தி தூண்டிவிட்டு இருக்கிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN: மேயர் அந்தஸ்திலே இருக்கிறவர்கள் என்று கனம் அங்கத்தினர் சொல்லக் கூடாது. அவர்கள் இந்தச் சபையில் இல்லை.

* SRI K. RAMADASS: அதை நான் வாபஸ் வாங்கிக் கொள்கிறேன். அப்படிப்பட்ட தவறான பாதையைக் காட்டு கிறார்கள். பிளாட்பாரத்திலேயும் மற்ற இடங்களிலேயும் குடிசைகள் அமைப்பதின் மூலம் சுகாதாரம் பாதிக்கப்படுகிறதா

[Sri K. Ramadass] [25th April 1962

இல்லையா என்று சிந்தித்துப் பார்க்கத் தவறி விடுகிறோம். அவைகளை அவ்வப்போது அப்புறப்படுத்த நகரசபையும் சர்க்காரும் முயற்சி எடுப்பதில்லை என்பது என் தாழ்மையான எண்ணம். 10 நாள் நோட்டீஸ் கொடுக்கிறார்கள். பிறகு பிரிக்கச் சொல்லுகிறார்கள். ஆனால் பிரிக்காமல் வந்து விடுகிறார்கள். பெர்மனன்டாக குடிசைகள் அமைத்துக் கொண்டு இருப்பது சுகாதாரக் கேடுகள் ஏற்பட உதவியாக இருக்கிறது என்று தெரிவித்துக்கொள்கிற நேரத்தில் அந்தமாதிரி குடிசைகள் போடுவதைத் தவிர்க்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதைப் போன்று அரசியல் கட்சிகளின் கொடிகள் அமைப்பதிலேயும் கூட பொது இடங்களில் கொடிகளை ஏற்றி விடுகிறார்கள். பிளாட்பாரம்- நடந்து செல்லக்கூடிய இடங்களில் கொடிகளை அமைப்பதைப் பற்றி யாரும் கவலை எடுத்துக் கொள்ளவில்லை. அதனால் அதிகமான கேடு, விபரீதங்கள், போக்குவரத்து இடைஞ்சல் ஏற்படுகின்றன. அவற்றைப் போக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்ததாக நமது தொழில் அமைச்சர் அவர்கள் மேல் நாடுகள் எல்லாம் பார்த்து வந்து உற்சாகத்தோடு தொழில் வளர்ச்சிக்கு பாடுபடுகிற அமைச்சராக இருக்கிறார்கள். அதனால் ஒரு காரியம் சொல்ல ஆசைப்படுகிறேன். தொழில் நிலையங்கள் சென்னையைச் சுற்றிலும் பரவலாக ஏற்படுகிறபோது, தொழிலாளர்களுக்கு என வீடு கட்டிக் கொடுக்கும்படி தொழிலதிபர்களை, சட்டம் இயற்றுவது மூலமானாலும் சரி அல்லது ஜாடைமாடையாகச் சொல்வது மூலமானாலும் சரி, கேட்டுக் கொண்டால் நல்லது என்று கருதுகிறேன். பெருந்தொழிலை அமைக்கும் போது 50 பேருக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் வேலை செய்தால் வீடு கட்டிக் கொடுத்தால் தான் மற்ற சௌகரியம் செய்து கொடுக்க முடியும்
5-00 p.m. என்று சொல்லலாம் என்று நினைக்கிறேன். சிறுசிறு தொழில்கள் என்றால் ஐந்து பேர்கள் பத்து பேர்கள் வசிக்கிற தொழில்களை நான் சொல்லவில்லை. 50-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் செய்யக் கூடிய தொழில் ஏற்படுத்தும்படியாகவும் அவர்களுக்கு கட்டாயமாக வீடு கட்டிக் கொடுக்கவேண்டுமென்றும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

கல்வியைப் பொறுத்தமட்டில் நாம் பாராட்டுகிற அளவுக்கு கல்வித்துறை வளர்ந்திருக்கிறது என்று சொன்னாலும் இளம குழந்தைகள் மத்தியில் நஞ்சைப் புகுத்துவது போல சில கட்சிகள் அரசியலைப் புகுத்தி வருவது இங்கு எல்லோருக்கும் தெரியும். இளம் குழந்தைகளின் உள்ளத்தில் அரசியல் உணர்ச்சிகளைப் புகுத்துவதால் அவர்களின் கல்வித்தாம் குறைந்து வருகிறது. ஒன்பது, பத்து வயதுள்ள குழந்தைகளை ஆரம்பத்திலேயே பல விதமான சிக்கல்களுக்கு உள்ளாக்கும் அளவுக்கு ஆசிரியர்களின் நிலைமை இருந்து வருகிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆசிரியர்கள் அரசியலில் ஈடுபடக் கூடாது என்று சொல்லும்போது இளம்பிள்ளைகளின் வாழ்க்கையிலும் இந்த நஞ்சு புகாமல் பாதுகாக்கப் படவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதை அரசாங்கம் கவனிக்க வேண்டும். இப்போது ஆசிரியர்

